# ஈரச் சுவடுகள்

ஈரச் சுவடுகள்

நூல் அறிமுகம்
நூல் ஆசிரியர் அறிமுகம்

1. முதல் நாகரிகம்
2. பண்டைய பூம்புகாரின் அமைப்பு
3. இலக்கியங்களில் புகார் நகரம்
4. பூம்புகாரில் கரிகால்சோழன்
5. பூம்புகாரும் புத்தமதமும்
6. கடலில் தொலைந்த பூம்புகார்
7. கடலிடம் தப்பித்த பகுதிகள்
8. தற்போதைய தோற்றம்
9. சிலப்பதிகார கலைக்கூடத்தின் நுழைவுவாயில்
10. பூம்புகார் அமைவிடம்
11. பல்லவர்களின் சாம்ராஜ்ஜியம்
12. மகாபலிபுரம் சரித்திரம்
13. இலக்கிய குறிப்புகள்
14. கலைப்பொக்கிஷம்
15. மகாபலிபுரம் அமைவிடம்
16. ஆயிரம் ஆண்டுகள் மௌனம்
17. வரலாற்றை ஏன் படிக்க வேண்டும்

எங்களைப் பற்றி - Free Tamil Ebooks

# ஈரச் சுவடுகள்

ஈரச் சுவடுகள்

பிரவீண் குமார்

மின்னூல் வெளியீடு : freetamilebooks.com



மின்னூலாக்கம் & அட்டைபடம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

This book was produced using pandoc

# நூல் அறிமுகம்

ஈர சுவடுகள் என்ற இந்த படைப்பில் கடலால் வளர்ந்து அந்த கடலுக்கே இரையான பழமையான நகரங்களான பூம்புகார் மற்றும் மகாபலிபுரம் பற்றி எழுதியிருக்கிறேன். வரலாற்று நிகழ்வுகளை அறிந்து கொள்வதில் என்ன பயன் என நம்மில் பலருக்கு தோன்றலாம். ஒவ்வொரு சரித்திரமும் நமக்கு சொல்ல ஏரளமான பாடங்களை கொண்டுள்ளன. மொழியும் வரலாறும் அழிந்தால் அந்த இனமே அழிந்துபோகும்.

இதுவும் வரலாறு சொன்ன பாடம் தான். இந்த புத்தகம் எழுதுவதற்க்கு முன் பூம்புகார் மற்றும் மகாபலிபுரம் ஆகிய பகுதிகளை நேரில் பார்வையிட்டபோது நான் எடுத்த புகைப்படங்களை கொண்டு அப்பகுதிகளின் தற்போதைய தோற்றத்தை காட்சிப்படுத்த முயன்றிருக்கிறேன். இந்த நூல் வலைப்பக்கங்களிளோ அல்லது வேறு இணையத்தளங்களிளோ வெளியிடப்பட்டது அல்ல, இத்தளத்தில் தான் நேரிடையாக வெளியிடுகிறேன். என் முதல் வெளியீடான கியூரியாசிட்டிக்கு கிடைத்த வரவேற்ப்பு இதற்கும் இருக்கும் என நம்புகிறேன்.

# நூல் ஆசிரியர் அறிமுகம்

பெயர் : பிரவீண் குமார்.R
வசிப்பிடம்: பெங்களூர்
படித்தது: பயோடெக்னாலஜி
ஈடுபாடு: அறிவியல் மற்றும் வரலாற்று நூல்கள்

இதை மின்நூலாக்கிய லெனின் குருசாமி மற்றும் இதை வெளியிடும் freetamilebooks தளத்திற்கும் நன்றி.

தொடர்புக்கு:rpk.biotech@gmail.com

# 1. முதல் நாகரிகம்

உலகில் மனித இனம் முதலில் தோன்றியது சுமார் இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முன் ஆப்ரிக்க கண்டத்தில் என நம்பப்படுகிறது. அங்கு தோன்றிய மனித இனம் பரிணாம வளர்ச்சியுற்று, நாகரிகமடைந்த குடியேற்றங்களை அமைக்க தோராயமாக 1,95,000 ஆண்டுகள் தேவைப்பட்டது. மனித வரலாற்றில் இதுவரை அறியப்பட்ட முதல் நாகரிகம் மெசபடோமியாவில் (தற்கால ஈராக், குவைத் நாடுகளை உள்ளடக்கிய பகுதி) கிமு3500 வாக்கில் தோன்றியது. அதாவது விவசாயம் செய்ய தெரிந்த, விலங்குகளை கையாள தெரிந்த மற்றும் வசிப்பிடங்களை ஏற்படுத்திக்கொண்டு வாழ்ந்த முதல் சமுதாயம் 5500 ஆண்டுகளுக்கு முன்பு மெசபடோமியாவில் தோன்றியது. அதை தொடர்ந்து எகிப்தில் நைல் நதி நாகரிகம் (கிமு 3000), சிந்து சமவெளி நாகரிகம் (கிமு 2500), சினாவின் மஞ்சள் நதி நாகரிகம் (கிமு 2200) ஆகிய நாகரிகங்கள் தோன்றி வளர்ச்சியடைந்தன.

இந்தியாவை பொருத்தவரை முதல் நாகரிகம் மற்றும் மிக பழமையான நாகரிகமாக அறியப்படுவது வடமேற்கில் அமைந்த சிந்துசமவெளி நாகரிகம் ஆகும். அங்கிருந்து சுமார் 2000 km தென்கிழக்கே வங்கக்கடலை முத்தமிட்டவாறு கட்டி எழுப்பப்பட்டு, பிற்காலத்தில் அந்த கடலுக்கே இரையான துறைமுக நகரமான காவேரி பூம்பட்டினம் (பூம்புகார்) பற்றிய, அங்கு உருவான நாகரிகம் பற்றி அறியும் முயற்சியே இந்த படைப்பு.

20 ஆம் நூற்றாண்டுக்கு முன்பு வரை பூம்புகார் பற்றிய வரலாறு இலக்கியங்களில் மட்டுமே வாழ்ந்து வந்தது. 1960 களில் NIO (தேசிய கடல்சார் ஆராய்ச்சி நிறுவனம்) மற்றும் தமிழக அரசின் அகழ்வாராய்ச்சிதுறையின் மூலம் புதையுண்ட பூம்புகாரின் சில சிதலங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றை ஆராய்ந்து அவை கிமு 2 ஆம்

நூற்றாண்டை சேர்ந்தவை என கண்டுபிடித்தனர். 2200 ஆண்டுகளுக்கு முன்பு வரை வளர்ந்த நகரமாக விளங்கிய பூம்புகார் தொடர்ச்சியான கடல் அரிப்பினாலும், ஆழி பேரலைகளாலும் (சுனாமி) கடலுக்குள் மூழ்கிபோனது. 21ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலேய அகழ்வாராய்சியாளர் "கிரஹாம் ஹான்காக்" என்பவர் இந்திய கடலோர நகரங்களை ஆராய்ந்து வெளியிட்ட ஆய்வின் முடிவில் குஜராத்தை சேர்ந்த காம்பே என்ற நகரமும், தமிழகத்தின் பூம்புகார் நகரமும் மிக பழமையான நகரமாக இருக்கலாம் என குறிப்பிடுகிறார். பூம்புகார் நகரமானது 11000 ஆண்டுகளுக்கு முன்பே வளர்ச்சியடைந்த நாகரிகமாக திகழ்ந்திருக்கலாம் என குறிப்பிடுகிறார்.

1990 களில் NIO பூம்புகார் கடலில் புதையுண்டிருந்த கோட்டையின் சிதலங்களை கண்டரிந்தனர் . 85 மீட்டர் நீளமும் 2 மீட்டர் உயரமும் 13 மீட்டர் இடைவெளியை கொண்ட இரு முனைகளை கொண்டதாக இருந்து.கிட்டதட்ட ஆங்கில எழுத்தான U வடிவில் காட்சியளிக்கிறது. கார்பன் டேட்டிங் படி இவை கிமு 200 க்கு முந்தையவை என அறிவிக்கப்பட்டாலும், இந்த இடத்தில் கடல்நீர் மட்டம் 23 மீட்டர்களுக்கு மேல் உயர்ந்துள்ளது எனவும், இந்த அளவு நீர்மட்ட உயர்வானது, பூமியின் கடைசி பனியுகத்தின் இறுதியில் பனிபாறைகள் உருகியதால் ஏற்பட்ட விளைவுகளால் மட்டுமே சாத்தியம். கடைசி பனியுகம் முடிந்து 11600 ஆண்டுகள் ஆவதால் இவை அதற்கு முன்பு இருந்த நகரமாக இருக்கலாம் எனவும் குறிப்பிடுகிறார். இதை பற்றிய தகவல் தினமலர் நாளிதலில் 2002 ஆம் ஆண்டு வெளிவந்தது.

ஒருவேளை இவரின் கனிப்புப்படி பூம்புகார் இவ்வளவு பழைய நகரமாக இருப்பின், உலகின் மிக பழமையான நாகரிகங்களில் முதல் நாகரிகமாக இருக்கவும் சாத்தியம் உள்ளது. உலக சரித்திரத்தை திருத்தி எழுதும் வாய்ப்பு இங்கு மேற்கொள்ளும் முழுமையான அகழ்வராய்சியால் மட்டுமே சாத்தியமாகும்.

# 2. பண்டைய பூம்புகாரின் அமைப்பு

உலகில் தோன்றிய அனைத்து நாகரிகங்களும் ஏதோ ஒரு நதியை அடிப்படையாக கொண்டு தொண்றியவை. அவ்வாறே மேற்கு தொடர்ச்சிமலையில் குடகு பகுதியில் உருவாகி தென்கிழக்காக பாய்ந்து பூம்புகாரில் கடலில் கலக்கும் காவேரி நதியை முக்கியமாக கொண்டு உருவான நகரமாதலால் காவேரி பூம்பட்டினம் என்றும் அழைக்கப்படுகிறது. பண்டையகால பூம்புகாரின் அமைப்பை பற்றி சங்க கால இலக்கியங்களின் மூலம் தெரிந்துகொள்ள முடிகிறது. இந்த நகரமானது கடலை ஒட்டி அமைந்த ஒருபகுதியாகவும் அதையடுத்து மற்றொரு பகுதி என இரு பகுதிகளாக இருந்துள்ளது. இரண்டிற்கும் இடைபட்ட பகுதி வியாபார சந்தையாக இருந்துள்ளது.கடலை ஒட்டி அமைந்த பகுதி பரபரப்பான துறைமுக நகராக இருந்துள்ளது. மேலும் இப்பகுதியில் மீனவர்கள், வியாபாரிகள், கப்பலில் சரக்கு ஏற்றி இறக்கும் தொழிலாலிகள் ஆகியோர் வசிப்பிடமாகவும் வெளிநாட்டு வியாபாரிகள் தங்கும் இடமாக இருந்துள்ளது. ஏற்றுமதி மற்றும் இறக்குமதி செய்யும் பொருட்களை பாதுகாத்து வைக்க சேமிப்பு கிடங்குகளும் இருந்துள்ளன. மிகப்பெரிய கப்பல்கள் கூட இந்த துறைமுகத்திற்கு வந்து சென்றதாக இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது. கப்பல்களிலிருந்து இறக்குமதியாகும் பொருட்களுக்கு வரி வசூலிக்கப்பட்டுள்ளது. அந்த பொருட்களுக்கு புலிக்கொடி பொறிக்கப்பட்ட முத்திறையிடப்பட்டுள்ளது. அரேபியாவிலிருந்து குதிரைகளும், இலங்கை மற்றும் இந்தோனேசியாவிலிருந்து விற்பனை பொருட்களும் இறக்குமதியாகியதாக கூறப்பட்டுள்ளது. கப்பலில் வரும் வெளிநாட்டு வியாபாரிகள் இங்கு தங்கி

வியாபாரம் செய்து வந்துள்ளனர். இவர்கள் ‘’யவனர்கள்’’ என இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ளனர் (குறிப்பாக கிரக்கர்களை). மேலும் கடற்கரையை ஒட்டியவாறு அமைந்த நகர்புற தெருக்களில் இசைக்கலைஞர்கள், தினக்கூலி தொழிலாலர்களும் வசித்து வந்தாகவும் இலக்கியங்கள் கூறுகின்றன.

கடலிலிருந்து சற்று தொலைவில் அமைந்த நகரின் மற்றொரு பகுதியில் மன்னர்களின் வசிப்பிடமான அரண்மனையும், அமைச்சர்களும் அதை சுற்றி அரசாங்க நிர்வாகிகளும் அரண்மனை பணியாளர்களும், போர் வீரர்களும், நடணக்கலைஞர்களும், ஜோதிடர்களும் வசித்துள்ளனர். மேலும் யானை மற்றும் குதிரைகளை தயார் செய்யும் களங்களும் இந்த நகர்பகுதியில் இடம்பெற்றிருந்ததாக இலக்கியங்களில் விவரிக்கப்பட்டுள்ளது. இவ்விரு நகர்புற பகுதிகளுக்கும் இடைப்பட்ட வீதி வியாபார சந்தையாக திகழ்ந்திருக்கிறது. கப்பலில் வந்த வெளிநாட்டு வியாபாரிகளும் இந்த சந்தையில் இறக்குமதி செய்த பெருட்களை விற்பனை செய்துள்ளனர். இரவு நேரங்களில் கூட இந்த சந்தைகள் செயல்பட்டு வந்திருக்கின்றன.

# 3. இலக்கியங்களில் புகார் நகரம்

காவேரி பூம்பட்டினம், புகார் நகரம் என்ற பெயரில் பல இலக்கியங்களில் பூம்புகார் பற்றி குறிப்புகள் உள்ளன. புறநானுறு, பட்டிணப்பாலை உட்பட கிமு 2ஆம் நூற்றாண்டை சேர்ந்த வட இலக்கிய பிராமி எழுத்து குறிப்புகளும் கிடைத்துள்ளன. மேலும் ஐம்பெரும் காப்பியங்களில் இரண்டு காப்பியங்கள் பூம்புகார் நகரில் நிகழ்ந்த கதையாகும். சிலப்பதிகாரம் கண்ணகியின் வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவத்தின் அடிப்படையிலும், மணிமேகலை மாதவியின் மகளான மணிமேகலையின் வாழ்க்கை சம்பவத்தை அடிப்படையாக கொண்டும இயற்றப்பட்டதாகும்.

தற்கால திரைப்படங்களில் கூட பெண்களை மையமாக கொண்டு வெளிவரும் திரைப்ப்படங்கள் மிக குறைவாக உள்ளபோது 2000 ஆண்டுகளுக்கு முன்பே இலக்கியங்களில் பெண்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது அக்கால வாழ்வியலில் காணப்பட்ட பெண்களின் சமநிலையை உணர்த்துவதாக உள்ளது.

# 4. பூம்புகாரில் கரிகால்சோழன்

தமிழ்நாட்டை அதிக காலம் ஆட்சிசெய்த சோழர் ஆட்சிகாலத்தை முற்கால சோழர்கள் காலம் மற்றும் இடைகால சோழர்கள் காலம் என பிரிக்கலாம். கிபி 3 ஆம் நூற்றாண்டுக்கு முன் முற்கால சோழர்கள் என்றும் கிபி 9 ஆம் நூற்றாண்டிற்கு பின் வந்தவர்கள் இடைகால சோழர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

முற்கால சோழர்களின் தலைநகரமாக விளங்கிய நகரங்கள் இரண்டு. அவை உறையூர் மற்றும் பூம்புகார். முற்கால சோழர்களில் முக்கியமானவர் கரிகால சோழன். சங்க கால பூம்புகாரை ஆட்சி செய்தவர்களுள் முக்கியமானவர். இவரது காலம் கிபி 2 ஆம் நூற்றாண்டு என நம்பப்படுகிறது. இவர் ஆட்சியில் பூம்புகார் பரபரப்பான துறைமுக நகராக விளங்கியது. இவரின் தந்தை இளஞ்சேட்சென்னி இறந்த பிறகு அரசியல் காரணங்களால் இவர் தலைமறைவாக வாழ்ந்தார். பிறகு இவர் பிடிபட்டு சிறையில் அடைக்கப்பட்டார் எனவும் அப்போது ஏற்பட்ட தீ விபத்தில் தப்பித்தபோது காலில் ஏற்பட்ட காயத்தால் கரிகால் சோழன் எனப் பெயர் பெற்றதாக இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கரிகால்சோழன் காலத்தில் சோழ அரசு விரிவடைந்தது. வெண்ணி (திருவாரூர் மாவட்டம் கோவில்வெண்ணி) பகுதியில் நிகழ்ந்த போரில் சேர மற்றும் பாண்டிய மன்னர்களை ஒருசேர தோற்கடித்தார். இவர் ஆட்சியில் நீர் மேலாண்மை சிறப்பாக இருந்தது. காவேரியின் கரைகளை உயர்த்தினார். உலகின் மிகப் பழமையான அணைகளுள் ஒன்றான கல்லணையை கட்டியவர் கரிகால்சோழன். இன்றுவரை இதன் கட்டுமானத் தொழில்நுட்பம் உலக பொறியியல் வல்லுனர்களால் போற்றப்படுகிறது. பழங்கால பூம்புகாரின்

பெருமைகளுள் கரிகால்சோழனின் தலைநகராக இருந்ததும் ஒன்று. கன்றை இழந்த பசுவுக்கு நீதி வழங்க தன் மகனை தேர் ஏற்றி கொன்ற மனுநீதி சோழனும் பூம்புகாரை ஆட்சிசெய்த மன்னர்களுள் ஒருவர்.

# 5. பூம்புகாரும் புத்தமதமும்

தமிழகத்தில் பௌத்த வழிபாடு மிக குறைவு. ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நிலமை வேறு. சரித்திரத்தை ஒவ்வொரு முறையும் நாம் உற்று கவனிக்கும்போதும், ஏதோ ஒரு உண்மை வெளிபட்டுக் கொண்டே இருக்கிறது. இலக்கியங்கள் தோன்ற முக்கிய காரணமே வரலாற்றை பாதுகாக்கத்தான் எனலாம். அவ்வாறு எழுதப்பட்ட சங்க கால இலக்கியங்களின் முலம் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழகத்தில், குறிப்பாக பூம்புகாரில் புத்தமதமும் பின்பற்றப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. புத்தரின் காலம் கிமு 6 ஆம் நூற்றாண்டாக இருந்தாலும் அது பெரிய அளவில் வளர்ச்சி அடைந்தது அசோகரின் (கிமு 3 ஆம் நூற்றாண்டு) காலத்தில் தான். புத்த மதத்தில் அதிக ஈடுபாடு கொண்ட மன்னர் அசாகர் உலகம் முழுவதும் அதை பரவசெய்ய தூதுவர்களை அனுப்பினார்.

புத்தமதத்தை தமிழகம் மற்றும் இலங்கையில் பரப்ப பொருப்பாளராக நியமிக்கப்பட்டவர் அசோகரின் மகன் மகிந்தா. இவர் இலங்கைக்கு பயணிக்கும் வழியில், அப்போதைய சோழ தலைநகரான பூம்புகாரில் ஏழு புத்த மடாலயங்களை எழுப்பியதாக நம்பப்படுகிறது. அசோகரின் முயற்ச்சியால் தமிழகம் உட்பட பல நாடுகளில் புத்தமதம் பரவியது. தமிழகத்தில் காஞ்சிபுரம், காவேரிபூம்பட்டிணம் (பூம்புகார்), உறையூர், மற்றும் மதுரை ஆகிய நகரங்கள் புத்தமத மையங்களாக செயல்பட்டுள்ளன. மேலும் இந்நகரங்கள் பாலி மொழி கற்பிக்கப்படும் மையங்களாகவும் திகழ்ந்துள்ளன. இந்நகரில் வாழ்ந்த பாலி மொழி கவிஞர்கள் பல புத்தமத இலக்கியங்களை இயற்றியுள்ளனர்.

இந்த பெரு நகரங்கள் மட்டுமல்லாது, கும்பகோணம், நாகப்பட்டிணம், மயூரப்பட்டிணம்(மயிலாடுதுறை),

புத்தமங்களம், கடலூர் ஆகிய சிறு நகரங்களும் புத்தமத தளங்களாக திகழ்ந்துள்ளன. இவ்வாறு தமிழகத்தில் முக்கிய மதமாக திகழ்ந்த புத்த மதம் காலப்போக்கில் மறைந்துவிட்டது. தற்போது தமிழ்நாட்டில் புத்த மதத்தை பின்பற்றுபவர்கள் 0.1% க்கும் குறைவாகத்தான் இருக்கும். கிபி 1 ஆம் நூற்றாண்டை சேர்ந்த புத்த சிலை ஒன்று பூம்புகார் கடலிலிருந்து தொல்லியல்துறையால் கண்டெடுக்கப்பட்டு காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.




(Courtesy: பூம்புகார் தொல்லியல் துறை அருங்காட்சியகத்தின் சேகரிப்பிலிருந்து)

பூம்புகார் அருகே பல்லவணேஸ்வரம் என்ற இடத்தில் 60 அடி நிளமுள்ள பழங்கால புத்தவிகார் ஒன்றின் மிச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. பூம்புகாருக்கு அருகே மேலையூரில் தங்கதகடு பதித்த தியாணநிலை புத்தர் செம்பு சிலை ஒன்றும் கிடைத்துள்ளது. மேலும் பூம்புகாரில் பிறந்த மணிமேகலையின் வரலாற்றை கூறும் இலக்கியமான மணிமேகலை என்ற காப்பியம் புத்த மதம் பற்றிய இலக்கியம் ஆகும்.

# **6.** கடலில் தொலைந்த பூம்புகார்

பூம்புகார் நாகரமானது ஒரே இரவில் அழிந்த நகரம் அல்ல. பலமுறை அழிந்து , பலமுறை மீண்டெழுந்து ஒருகட்டத்தில் தொலைந்தே போய்விட்டது. கடந்த கால பூம்புகாரை இரண்டாக பரிக்கலாம். வரலாற்று காலம் மற்றும் வரலாற்றுக்கு முந்தைய காலம். வரலாற்று முந்தைய காலம் என நான் குறிப்பிடுவது 11000 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த பூம்புகார். வரலாற்றுக்கு முந்தைய பூம்புகார் நாகரித்தை பற்றிய வலுவான ஆதாரங்கள் முழுமையாக கிடைக்கவில்லை. கிடைக்கவில்லை என்பதைவிட கண்டுபிடிக்கப்படவில்லை எனலாம். எனவே கடைசி பனியுகத்திற்கு முன்பே இங்கு நகர நாகரிகம் செழித்திருந்ததா, எவ்வளவு பெரிய நகரமாக விளங்கியது போன்ற வலுவான தகவலகள் கிடைக்கவில்லை. ஆனால் கடைசி பனியுகத்தால் உலகம் முழுவதும் கடல் நீர் மட்டம் பல மீட்டர்கள் உயர்ந்து, நிலப்பதியை விழுங்கியது உண்மை. அதற்கு பூம்புகார் மட்டும் விதிவிலக்காக இருந்திருக்க முடியாது.

இப்போது வரலாற்றுகால பூம்புகாருக்கு வருவோம். வரலாற்றுகால பூம்புகார் என குறிப்பிடுவது கிமு 3 ஆம் நுற்றாண்டிற்கு பிந்தைய பூம்புகார். இக்கால பூம்புகார் பற்றி பக்கம் பக்கமாக இலக்கியங்கள் முதல் அகழ்வாராய்ச்சி முடிவுகள் வரை ஏராளமான ஆதாரங்கள் உள்ளன. கிமு 3 ஆம் நூற்றாண்டிலிருந்து கிபி 7 ஆம் நூற்றாண்டிற்கு இடைப்பட்ட காலத்தில் பரப்பரப்பான துறைமுகமக நகரமாக வளர்ந்து ரோம், கிரேக்கம், சீனம், எகிப்த் மற்றும் அரேபியா என பல உலக நாடுகளுடன் வர்த்தகம்புரிந்து அதே காலகட்டத்தில் கடலால் சூரையாடப்பட்டது. இந்த இடைப்பட்ட காலகட்டத்தில் உருவான காப்பிய நூலான மணிமேகளையில் கடல்கோள் ஏற்பட்டு பூம்புகார்

நகரம் கடலால் அழிந்ததாக குறிப்பிடப்பட்டுள்ளது. அகழ்வாராய்ச்சியில் கிடைத்த முடிவுகளும் சுனாமியால் அழிந்திருப்பதற்கான வாய்ப்புகள் இருப்பதாக தெரிவிக்கின்றன. இவ்வாறு கடல்நீர் மட்ட உயர்வு மற்றும் சுனாமி பேரலை போன்ற கடல் சீற்றத்தால் இந்த வர்த்தக நகரம் சரித்திரத்திலிருந்து தொலைந்துபோனது. இங்கு தொலைந்தது வெறும் நகரம் மட்டுமல்ல. தெலைந்தது ஒரு நாகரிகம் , ஒரு வரலாறு. இழந்தவற்றை மீட்டெடுக்க முடியாது. ஆனால் இழந்த வரலாற்றை மீட்டெடுக்க முயற்ச்சிக்கலாம். நம் வரலாறுகளே நம் வாழ்வின் அடையாளங்கள். (குறிப்பு: 2004 ஆம் ஆண்டு ஏற்பட்ட சுனாமியின் போது பூம்புகாரில் ஏற்பட்ட உயிரிழப்பு 150 கும் அதிகம்)

# 7. கடலிடம் தப்பித்த பகுதிகள்

பழைய பூம்புகாரின் பெரும்பாலான பகுதிகள் கடலில் மூழ்கிபோனாலும் சில பகுதிகள் மட்டும் எஞ்சியள்ளன. அவை,

- வானகிரி
- பல்லவணேஸ்வரம்
- சாயாவனம் (திருசைகாடு)
- மேலையூர்
- கீழையூர்
- மேலப்பெரும்பள்ளம்
- கீழப்பெரும்பள்ளம்

இப்பகுதிகள் 2000 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த பொலிவை இழந்தாலும் அப்படி ஒரு நகரம் இருந்ததற்கான அடையாளங்களை சுமந்து நிற்கின்றன.

# 8. தற்போதைய தோற்றம்

ஒரு காலத்தில் தூங்கா வர்த்தக நகரமாக பரபரப்பாக செயல்பட்டுக்கொண்டிருந்த பூம்புகார் தற்போது சிறு மீன்பிடி கிராமமாக சுருங்கிவிட்டது. வரலாற்றின் மீது நாட்டம் கெண்டவர்களுக்கு இது ஒரு சுற்றலா தளமாகவும் திகழ்கிறது. தொல்லியல் துறையால் கண்டெடுக்கப்பட்ட பொருட்களைக் கொண்டு ஒரு அருங்காட்சியகம் அமைக்கப்பட்டுள்ளது. இதனுள் பல அரியவகை பொருட்கள் இடம்பெற்றுள்ளன. குறிப்பாக 1800 ஆண்டுகள் பழமையான புத்தர் சிலை உள்ளது. கடலில் கிடைத்ததால் உருவம் தெரியாத அளவிற்கு அரிக்கப்பட்டுள்ளது. கிமு 3 ஆம் நூற்றாண்டில் அசோகரின் மகன் இலங்கைக்கு செல்லும் வழியில் இங்கு தங்கி புத்த மதத்தை பரப்பினார் என்று முன்பே குறிப்பிட்டிருந்தேன். அப்போதிலிருந்து அடுத்த சில நூற்றாண்டுகளுக்கு புத்தமதம் பூம்புகாரில் செழிப்பாக இருந்திருக்க வேண்டும் என்பதையே இவை கூறுகின்றன. பல்வேறு காலங்களில் பயண்பாட்டில் இருந்த ஆபரணங்கள், முதுமக்கள் தாழி ஆகியவையும் இடம்பெற்றுள்ளன.

இது தவிர சீன தேசத்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட 18 ஆம் நூற்றாண்டை சேர்ந்த மது குடுவைகள், ஜாடிகள், இடம்பெற்றுள்ளன. மேலும் பழங்காலத்தில் பயண்படுத்தப்பட்ட கப்பல்களின் மாதிரிகள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. இவை அந்த கால கப்பல் போக்குவரத்தை கண்முன் கொண்டுவருகின்றன. குறிப்பாக ஆமை கப்பல் போன்ற மாறுபட்ட கப்பல் வகைகள் அற்புதம். வரலாற்றில் ஈடுபாடு உள்ளவர்களுக்கும், மாணவர்களுக்கும் இந்த அருங்காட்சியகம் பார்க்கவேண்டிய இடம்.

# 9. சிலப்பதிகார கலைக்கூடத்தின் நுழைவுவாயில்

தொல்லியியல் துறை அருங்காட்சியகத்திற்கு அருகில் தமிழக அரசால் அமைக்கப்பட்டுள்ள சிலப்பதிகார கலைக்கூடம் அமைந்துள்ளது. இதனுள் கண்ணகி மற்றும் கோவலனின் வாழ்க்கை வரலாறு சிற்பங்களாக செதுக்கப்பட்டுள்ளது.

ஒரு காலத்தில் இரவுப்பகலாக பெரும் கப்பல்களை வரவேற்ற கடற்கரை இன்று சிறு மீன்பிடி படகுகளுக்கு வழிகாட்டியாக நிற்கும் கலங்கரை விளக்கத்தை சுமந்து கிடக்கிறது.





மேற்குதொடர்ச்சி மலையில் உருவாகி 750 கிமி பயணித்து துரும்பாக இளைத்துபோய் கலைப்புடன் கடலில் சங்கமிக்கும் காவேரியின் முகதுவாரத்தில் உண்ணிடத்தில் இன்னும் எதாவது இருக்காதா என்ற எதிர்பார்ப்பில் வலை வீசும் மீனவர்.

# 10. பூம்புகார் அமைவிடம்

பூம்புகார் சென்னைக்கு தெற்கே 275 km தொலைவில் வங்கக்கடலோரம் காவிரி கரையில் அமைந்துள்ளது. அருகிலுள்ள விமானநிலையம் 148km தொலைவிலுள்ள திருச்சி விமானநிலையம் ஆகும். அருகில் உள்ள பெரிய பேருந்துநிலையம் மற்றும் இரயில்நிலையம் 24 km தொலைவிலுள்ள மயிலாடுதுறையில் அமைந்துள்ளன. பூம்புகாரில் பார்வையிடவேண்டிய இடங்கள்,

- தொல்லியல்துறை அருங்காட்சியகம்
- கலைக்கூடம்
- பாவை மன்றம்
- நெடுங்கால் மன்றம்
- கலங்கரை விளக்கம்

இது தவிர பூம்புகாரை சுற்றி தரங்கம்பாடி கோட்டை மற்றும் பல ஆண்மீக சுற்றுலாதலங்கள் இடம்பெற்றுள்ளன.



# 11. பல்லவர்களின் சாம்ராஜ்ஜியம்



கிபி 6 ஆம் நூற்றாண்டிற்கும் கிபி 10 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் காஞ்சிபுரத்தை தலைமையிடமாகக் கொண்டு ஆட்சிசெய்த பல்லவ மன்னர்கள் காலத்தில் கட்டி எழுப்பப்பட்ட நகரமே மகாபலிபரம். பூம்புகார் மற்றும் மகாபலிபுரம் ஆகிய நகரங்களுங்கிடையே இருக்கும் சில ஒற்றுமைகள் அவற்றின் வரலாறுகள் சொல்லும் பாடம் அகியவையாலே இவை இந்த ஒரே பதிப்பில் இடம்பெற்றிருக்கின்றன. இரு நகரங்களுமே 2000 ஆண்டுகளுக்கு முன்பே கடல்வழி வர்த்தக நகரங்களாக செயல்பட்டுவந்துள்ளன. இரண்டுமே உலக நாடுகளுடன் கடல்வழி வணிகத்தில் ஈடுபட்ட பரப்பரப்பான நகரங்கள். கடலால் வாழ்ந்த நகரங்கள் ஒருநாள் கடலுக்கே இரையாயின. ஆழிப்பேரலை மற்றும் கடல் அரிப்பிற்கு தப்பிய ஒரு பகுதியே தற்போது எஞ்சியிருக்கிறது. சில நூற்றாண்டுகளில் இதுவும் மூழ்கிப்போகலாம்.

# 12. மகாபலிபுரம் சரித்திரம்

கிபி 7ஆம் நூற்றாண்டில் இப்பகுதியை ஆட்சிசெய்த பல்லவ மன்னன் முதலாம் மகேந்திரவர்மனால் இப்பகுதி கலை பல்கலைக்கழகமாக உருபெற்றது எனலாம். இவரை தொடர்ந்து ஆட்சி செய்த முதலாம் நரசிம்மவர்மன் என மூன்று தலைமுறைகளாக புடைப்புச் சிற்பங்கள், குகை கோயில்கள், கடற்கரை கோயில் என சிற்பக்கலையின் தலைநகராக உருவாக்கப்பட்டன. பெரும்பாலும் இவை ஒவ்வொன்றும் monolithic எனப்படும் ஒரே கல்லில் செதுக்கப்பட்ட கட்டுமானங்கள். இவற்றில் கடைசியாக கட்டப்பட்டது தான் கடற்கரை கோயில்.

இன்னும் சற்று பின்னோக்கி சென்றால், 2000ஆண்டுகளுக்கு முன்பே இது ஒரு துறைமுக நகரமாக செயல்பட்டு வந்துள்ளது. சீனா, ரோம், மத்திய கிழக்கு நாடுகள் என பல நாடுகளுடன் இங்கிருந்து கப்பல் போக்குவரத்து நிகழ்ந்துவந்துள்ளது. கிபி 4 ஆம் நூற்றாண்டை சேர்ந்த ரோமானிய கால காசுகள் இங்கு கிடைத்துள்ளன. தேசிய கடலாராய்சி நிறுவனம் நிகழ்திய ஆய்வில் 6-8 மீட்டர் ஆழத்தில் கட்டுமாண அமைப்புகள் கண்டுபிடிக்கப்பட்டன. குறிப்பாக 10மீட்டர் நிளம் 2.5 மீட்டர் அகலமான சுவர் பகுதி மேலும் பல அளவுகளில் சுவர் பகுதிகள் காணப்படுகின்றன.

மாலுமிகளால் இந்நகரம் ஏழு கோயில்களின் நகரம் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. ஆறு கோயில்கள் மூழ்கிப்போக எஞ்சியிருப்பது தற்போதுள்ள கடற்கரை கோயில் மட்டுமே என உள்ளூர் மக்களால் கூறப்படுகிறது. இது எந்த அளவு உண்மை என தெரியாது, ஆனால் இருக்கும் இந்த ஒரு கலைப் பொக்கிஷமும் உப்புக்காற்றின் உராய்வால் கரைந்து சிதைந்துகொணடு இருக்கிறது.

# 13. இலக்கிய குறிப்புகள்

பூம்புகார் பற்றி கிடைத்த அளவிற்கு , மகாபலிபுரம் பற்றிய சங்ககால இலக்கியங்கள் கிடைக்கவில்லை. ஆனால் பெரும்பானாற்றுப்படை என்ற சங்க இலக்கியத்தில் இப்பகுதி நிற்பெய்யறு என்ற பெயரில் தொண்டைநாட்டு துறைமுக நகராக குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் கிபி 8 ஆம் நூற்றாண்டை சேர்ந்த திருமங்கை ஆழ்வார் தனது நூலில் இப்பகுதியை குறிப்பிட்டுள்ளார்.

அதிக இலக்கிய குறிப்புகள் கிடைக்காததற்கு காரணம், நாம் அறியாத வேறு பெயர்களில் இலக்கியக்களில் குறிப்பிடப்பட்டு இருக்கலாம். மேலும் சங்க நூல்களில் பல கிடைக்கவே இல்லை. அவற்றுடன் இந்நகரம் பற்றிய குறிப்புகளும் தொலைந்திருக்கலாம்.

# 14. கலைப்பொக்கிஷம்

கடலால் நீர்மட்ட உயர்விற்கு பலியானது போக எஞ்சிய பகுதியே தற்போதைய மகாபலிபரம். இவையனைத்தும் 1200 முதல் 1500 ஆண்டுகள் பழமையானவை. கடற்காற்றால் இவையும் சிதைந்து கொண்டிருக்கின்றன. நுணுக்கமாக செதுக்கப்பட்ட சிற்பங்கள் எல்லாம் உருவங்கள் தெரியாதவாறு சிதைந்து கொண்டிருக்கின்றன. 2004 ஆம் ஆண்டு ஏற்பட்ட சுனாமியால் இப்பகுதி பாதிக்கப்பட்டது, குறிப்பாக கடற்கரை கோவில். சுனாமியால் இங்கு ஒரு நன்மையும் நிகழ்ந்தது எனலாம். ஆழிப்பேரலைகள் உள்வாங்கிய பின்பு நீருக்கடியில் புதைந்திருந்த சில கட்டுமானப்பகுதிகள் வெளிப்பட்டன. குறிப்பாக சிங்க சிலை.இந்த சிதலமடைந்த பகுதிகள், கடலில் மூழ்கிபோன கோயில் போன்ற கட்டுமானப்பகுதியாக இருக்கலாம் என நம்பப்படுகிறது.



இந்த பகுதியின் சிறப்பை அறிந்த உலகநாடுகள் சபை இப்பகுதியை உலக பாரம்பரிய சின்னமாக

அறிவித்து சிறப்பித்துள்ளது. வெளிநாட்டு சுற்றுல்லா பயணிகள் உட்பட அயிரக்கணக்கானோர் பார்வையிடுகின்றனர். டிசம்பர் முதல் ஜனவரி வரை இங்கு நடைபெறும் இசை மற்றும் நாட்டியவிழா பிரசித்தி பெற்றது.

ஒரு புத்தகம் விவரிப்பதை ஒரே ஒரு புகைப்படம் விளக்கிவிடும். பல்லவர்களின் சிற்பக்கலையை பின்வரும் புகைப்படங்கள் விளக்கும்.

ஒரே மலையில் ஒரு பகுதி குகை கோயில், மறுபகுதியில் புடைப்பு சிற்பக்கங்கள் என அழகாக காட்சியளிக்கிறது. சுமார் 1500 ஆண்டுகள் ஆகியதாலும், கடற்காற்றாலும் எற்பட்ட அரிப்பையும் மீறி இவை அழகாக காணப்படுகின்றன.



மலைகளில் வெடுகுண்டு வைத்து கிரானைட் வெட்டும் நமக்கு மலையில் சிற்பங்கள் செதுக்குவதன் கலை சுட்டாலும் வராது. இந்த சிற்பத்தில் இரு யானைகள் இருப்பது போல் தெரிந்தாலும் ஏழு குட்டிகள் உட்பட மொத்தம் ஒன்பது யானைகள் நுனுக்கமாக உருவாக்கப்பட்டுள்ளன.



சிற்பி முதல் புகைப்பட கலைஞர் வரை அனைவருக்கும் முதன்மையான பயிற்சி மாதிரி யானைகள் தான் போலும். ஒற்றை கல்லில் செதுக்கப்பட்ட யானை நூற்றாண்டுகள் கடந்தும் இளமையாக கட்சியளிக்கிறது.

# 15. மகாபலிபுரம் அமைவிடம்

சென்னையிலிருந்து 58 கிமி தெற்கே கிரேட் சால்ட் லேக் மற்றும் வங்க கடலின் இடையே அமைந்துள்ளது. 45km தொலைவில் சென்னை விமான நிலையமே அருகில் உள்ள விமானநிலையம் ஆகும். 29km தொலைவிலுள்ள செங்கல்பட்டு இரயில்நிலையமும் 45km தொலைவில் சென்னை இரயில்நிலையமும் அமைந்துள்ளது. சென்னை, காஞ்சிபுரம், செங்கல்பட்டு மற்றும் பாண்டிச்சேரியிலிருந்து பேருந்துகள் இயக்கப்படுகின்றன. இங்கு பார்க்கவேண்டிய இடங்கள்

- கடற்கரை கோயில்
- ஐந்த ரதம்
- அர்ஜுனன் தபசு
- குகைக்கோயில்கள்
- புலிக்குகை
- வெண்ணை உருண்டை
- சிற்பக்கலை அருங்காட்சியகம்
- Seashell அருங்காட்சியகம்

மெசபடோமியா முதல் சிந்துசமவெளி வரை நாகரிகங்கள் நதிக்கரையில் தோன்றியதே தற்கால வரலாறு. ஆனால் சற்று சிந்தித்தால் கடலை மையமாக கொண்டே முதல் நாகரிகம் தோன்றியிருக்க வாய்ப்பு இருக்கிறது. கடைசி பனியுகம் முடியும் வரை அசுர வேகத்தில் உயர்ந்து கொண்டிருந்த கடல் நீர்மட்டத்தால் கடற்கரை நாகரிகங்கள் மறைந்து போயிருக்கலாம். அதில் கற்ற பாடமே மக்களை நதிக்கரை நோக்கி இடம்பெயர செய்திருக்கலாம். பூம்புகார், மகாபலிபுரம், நாகப்பட்டினம், கொற்கை மற்றும் அழகன்குளம் ஆகிய ஐந்து துறைமுக நகரங்கள் தமிழகத்தில் இருந்துள்ளன. அந்நாட்களில் துறைமுகம் என்பது

பிற நாடுகளுடனான வர்த்தகம் மட்டுமல்ல கலாச்சாரம் மற்றும் பண்பாடுகள் பிற நாடுகளுக்கு பரவியதும் துறைமுகங்களின் வழியாகவே. இவை அனைத்தும் இன்று இல்லை. இன்று நாம் வாழும் பகுதிளும் நாளை இல்லாமல் போகலாம். இவை அனைத்தும் நமக்கு சொல்லும் பாடம் ஒன்றுதான். அதை படித்துக்கொள்வது அவரவர் கைகளில்.

# **16.** ஆயிரம் ஆண்டுகள் மௌனம்



“சிகரம் தொட்ட சிம்மாசனங்கள் முதல் சீரிபாய்ந்த மரக்களங்கள் வரை ஒவ்வொன்றாக ஆழியின் ஆழம் தொட்டுவிட, வங்கக் கடலின் வாய்கெட்டும் தொலைவில் ஒற்றை சாட்சியாக ஆயிரம் ஆண்டுகள் மௌனத்தை சுமந்து கொண்டு நான் மட்டும் தனிமையில்”

# 17. வரலாற்றை ஏன் படிக்க வேண்டும்

நம் வாழ்க்கைமுறைக்கு ஏற்ப நம் கல்விமுறையும் மாறிவருகிறது. நம் அப்பாக்கள் படித்த அறிவியலை விட நாம் படிக்கும் அறிவியல் மேம்பட்டது. நாம் படிக்கும் அறிவியலை விட நம் அடுத்த சந்ததியினர் படிக்கும் அறிவியல் மேலும் மேம்பட்டதாக இருக்கும். அதாவது நம் தலைமுறை அறிவியல் வளர்ச்சி மனிதர்களுக்கு கணினியை கையாள கற்றுதந்தது. நம் அடுத்த தலைமுறை அறிவியல், கணினிகளுக்கு மனிதர்களை கையாள கற்றுதருகிறது (Artificial Intelligence). இவ்வாறு நாளுக்கு நாள் அறிவியல் மாறலாம் ஆனால் வரலாறு என்றுமே மாறுவதில்லை. என் தாத்தா வரலாறு படித்தபோதும் கல்லணையை கட்டியது கரிகால சோழன் தான். நான் வரலாறு பாடம் படித்தபோதும் கல்லணையை கட்டியது கரிகாலசோழன் தான். இந்த தலைமுறை பிள்ளைகளுக்கு கல்வியின் நோக்கம் பணம் சம்பாதிக்க என்று மட்டுமே சொல்லிகொடுத்துள்ளோம், எனவேதான் வரலாறு படிப்பதை தேவையற்ற செயலாக கருதுகிறது புதியதலைமுறை. கடந்த காலங்களில் இருந்து நாம் கற்ற வரலாறுதான் எதிர்காலத்தை வடிவமைக்கும். இரண்டு உலக யுத்தங்கள் ஏற்படுத்திய வலியை மறக்காதவரை மூன்றாம் உலக யுத்தம் ஏற்படாது. அவை தேவையற்ற பழைய வரலாறுகள் என ஒதுக்கும்போது உலகம் அடுத்த போரை நோக்கி நகர்கிறது என பொருள். மிகச்சிறந்த இந்திய அரசர்கள் என தேடிப்பார்த்தால் அதில் முதன்மையானவர்களாக சோழற்களோ மற்ற தென்இந்திய அரசர்களோ இடம்பெறுவதில்லை. அவர்களின் வரலாற்றை நாம் சரியாக அடுத்த தலைமுறைக்கு கொண்டுசேர்க்கவில்லை என தோன்றுகிறது.

ஒவ்வொருவரும் வரலாற்றை படிக்க வேண்டும், அது

நம் மீது ஏற்படுத்தும் தாக்கம் நமக்கு உந்துசக்தியாக செயல்படும். ஒருசெல் தாவரமாக நீரில் தோன்றியது முதல் , உணவு தட்டுபாட்டால் நீரிலிருந்து நிலவாழ் உயிரியாக பரிணமித்தது முதல், வேட்டை விலங்குகளை நோட்டமிட இரண்டுகால்களில் நடக்க தொடங்கியது முதல், கைகளால் கருவிகளை பயண்படுத்த தொடங்கியது முதல், ஹோமோ நியாண்டர்தால் இனத்தை அழித்துவிட்டு, ஹோமோ செப்பியன்ஸாக இந்த பூமியின் ஒற்றை ஆளுமையாக உருவானதுவரை என அறிந்துகொள்ள ஏகப்பட்ட வரலாறுகள் உள்ளன, நாம் தான் தேடலை தொடங்க வேண்டும்.

# எங்களைப் பற்றி - **Free Tamil Ebooks**

மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்: மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர். ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்: ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம். தமிழிலுள்ள மின்புத்தகங்கள்: தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள். சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு

கிடைக்கப்பெறுவதில்லை. எனவே ஒரு தமிழ் வாசகர் மேற்கூறிய “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகளை” வாங்கும்போது, அவரால் எந்த ஒரு தமிழ் புத்தகத்தையும் இலவசமாகப் பெற முடியாது. சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி? சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன. நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம். அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம். எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும். தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா? கூடாது. ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும். அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும். அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது. வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத்

தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும். பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும் வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம். FreeTamilEbooks.com இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும். PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம். அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம். இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா? நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும். அவ்வளவுதான்! மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு: ஒருசில பதிவர்கள்/ எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை

“Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல் தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல் சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல் விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும். இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்? யாருமில்லை. இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும். மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும். இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்? ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை. ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம். அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது. தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா? உள்ளது. பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன. 1. vinavu 2. badriseshadri.in 3. maattru

4. kaniyam 5. blog.ravidreams.net எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் Creative Commons உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது? இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

துவக்கம் உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்]. தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது. இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம். இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும். இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும். எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம். இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம். http://creativecommons.org/licenses/ நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம். e-mail : freetamilebooksteam@gmail.com FB : https://www.facebook.com/FreeTamilEbooks G +: https://plus.google.com/communities/108817760492177970948 நன்றி. முடிவு

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள். முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள். கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைfreetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள். ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது ?

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும். ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது. அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும். மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்? ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும். நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம். தவிர்க்க வேண்டியவைகள் யாவை? இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி? நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம். email : freetamilebooksteam@gmail.com Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948 இத்திட்டத்தில்

ஈடுபட்டுள்ளவர்கள் யார்? Shrinivasan tshrinivasan@gmail.com Alagunambi Welkin alagunambiwelkin@fsftn.org Arun arun@fsftn.org இரவி Supported by Free Software Foundation TamilNadu, Yavarukkum Software Foundation http://www.yavarkkum.org/

உங்கள் படைப்புகளை வெளியிடலாமே உங்கள் படைப்புகளை மின்னூலாக இங்கு வெளியிடலாம். 1. எங்கள் திட்டம் பற்றி - http://freetamilebooks.com/about-the-project/ தமிழில் காணொளி - http://www.youtube.com/watch?v=Mu_OVA4qY8I 2. படைப்புகளை யாவரும் பகிரும் உரிமை தரும் கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் பற்றி - கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமை - ஒரு அறிமுகம் http://www.kaniyam.com/introduction-to-creative-commons-licenses/ http://www.wired.co.uk/news/archive/2011-12/13/creative-commons-101 https://learn.canvas.net/courses/4/wiki/creative-commons-licenses உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமத்தை இங்கே தேர்ந்தெடுக்கலாம். http://creativecommons.org/choose/ 3. மேற்கண்டவற்றை பார்த்த / படித்த பின், உங்கள் படைப்புகளை மின்னூலாக மாற்ற பின்வரும் தகவல்களை எங்களுக்கு அனுப்பவும். நூலின் பெயர் நூல் அறிமுக உரை நூல் ஆசிரியர் அறிமுக உரை உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் நூல் - text / html / LibreOffice odt/ MS office doc வடிவங்களில். அல்லது வலைப்பதிவு / இணைய தளங்களில் உள்ள கட்டுரைகளில் தொடுப்புகள் (url) இவற்றை freetamilebooksteam@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்பவும். விரைவில் மின்னூல் உருவாக்கி வெளியிடுவோம். நீங்களும் மின்னூல் உருவாக்கிட உதவலாம். மின்னூல் எப்படி உருவாக்குகிறோம்? - தமிழில் காணொளி - https://www.youtube.com/watch?v=bXNBwGUDhRs இதன் உரை வடிவம் ஆங்கிலத்தில் - http://bit.ly/create-ebook எங்கள் மின்னஞ்சல் குழுவில் இணைந்து உதவலாம். https://groups.google.com/forum/#!forum/freetamilebooks நன்றி !